மான்களுக்கு எவ்வளவும் கேட்கச் சகிக்காமல் கர்ணகடோரமா யிருக்கிறது.

அவர்களிடத்திற் பேசினால் நமக்கிருக்கிற புத்தியும் மழுங்கிப் போமென்று பயப்படவேண்டியதா யிருக்கின்றது. சில புருஷர்கள் தங்கள் பத்தினிகள் எவ்வளவோ சுந்தரமுள்ளவர்களா யிருந்தும், அவர்கள் படியாதவர்களாயும் மதுரமான சம்பாஷணஞ் செய்யத்தகாதவர்களாயும் இருப்பதால் 'வீட்டுப் பெண்சாதி வேம்பும், நாட்டுப் பெண்சாதிகரும்பும்' என்பதுபோல, சொந்தஸ்திரீகளை விட்டுவிட்டு அழகில் மூதேவிக்கு மூத்தவளாயிருக்கிற தாசிகள் பாதமேகதியென்று ஓடுகிறார்கள். தாசிகள் கல்வி கற்று மதுரமாய்ப் பேசுவதே இதற்குக் காரணமா யிருக்கிறது. பெண்கள் கல்வி கற்றிருந்தால், அவர்கள் அழகில்லாதவர்களா யிருந்தாலும் அவர்களைப் புருஷர்கள் தாசிகள் வீட்டுக்குப் போகிறவழியை அடைக்கு மென்பதற்கும் இதுவே சாட்சியமாம்.

ஒரு புருஷனுக்குத் தன் பெண்சாதிமேல் சந்தேக முண்டாகி அவளைக் கண்டித்துத் தலைமண்டை யுள்ளவரையில் சோரநாயகனைச் சேருகிறதில்லை யென்று சத்தியம் பண்ணும்படி கேட்டனனும், அவள் புருஷனுக்குத் தெரியாமல் ஒரு மண்டையோட்டை யெடுத்துத் தலைமேல் வைத்துக்கொண்டு தலை மண்டை யுள்ளவரையில் விபசரிக்கிறதில்லை யென்று பிரமாணஞ்செய்துகொடுத்துப் பழைய படியே நடந்துவந்தனளாம். இப்படிப்பட்ட படியாத ஸ்திரீகளுடைய கற்பைப் புருஷன் தடியெடுத்துக்கொண்டு காக்கவேண்டியதா யிருக்கிறது. பெண்கள் படித்தால், அவர்களுடைய கல்வியே கற்புக்குக் காவலாயிருக்குமென்பது நிச்சயமே.

"சிறைகாக்குங் காப்பெவன் செய்யு மகளிர்
நிறைகாக்குங் காப்பே தலை."

என்று திருவள்ளுவநாயனார் சொல்வது உண்மைதானே.

என்று சரமாரியாக அன்று இரவு 9-மணிவரையில் அனேக விஷயங்களை மேற்கோளாகக்காட்டிப் பிரசங்கித்தார். எல்லோரும் காணமிர்தம் கர்ணமிர்த மென்று களிமழ்கிவெய்தி, வல்லாளனைப் புகழ்ந்து சென்றனன்:—சுபம்.

மனோரஞ்சனி.

முற்றிற்று.

—

